**என் இனிய நண்பர்களே! தாய்மார்களே! அல்லாஹ் சகல நலன்களும் அருள்வானுக!**

தேனின் மதுரம் வெட்கும் திவ்விய "இஹ்யா உலூமுத்தீன் மாலை"யை, வானின் புகழ் நிறைந்த வரகவி, சாம் ஒலிகள் நாயகம் (ரலி) வண்ணத்தமிழில் தந்தார்கள். அவர்கள் பாடிய பாமாலைகளோ, ஓராயிரம். (1000) மாபெரும் நீலக்கடலுக்கு ஒப்பானது. அக் கடலில் மின்னும் நித்தில மணிகளைப் பலரும், பல காலத்தில் நமக்கு சேர்த்துத் தந்துள்ளார்கள். அந்த சீரிய பணியில் "காஸிம் புலவர்" அச்சகத்தார் முயன்று, முனைந்து இந்த இன்ப மாலையை நமக்கு விருந்தாகத் தருகின்றனர். இத்திரு விருந்தில் கலந்து கொள்ளுங்கள். அடுத்து, சிறியேன் வெளியிடும் "தோகை மாலை"யும் அவர்களே அருளினார்கள். இன்ஷா அல்லாஹ் அதுவும், "காஸிம் புலவர்" அச்சகத்திலேயே அச்சாகின்றது. எதிர் பாருங்கள். அப்பா அவர்களின் மேலான பொருட்டினால் இருலோகிலும் நல்வாழ்வு பெற வல்ல நாயன் அருள் பாலிப்பானாக. ஆமீன்.

அன்புடன்,
சாம் ஒலி ஊழியன்
S. K. M. சதக்கத்துல்லா.

மத்ரஸதுல் பிர்தவ்ஸ்,
சாயல்பட்டணம்.

786

# இஹ்யா மாலை.

(மாமேதை, காமில் ஸாம் ஷிஹாபுத்தீன் ஒலியுல்லாஹ் (ரலி) அவர்களின் ஆயிரம் மாலைகளில் ஒன்று)



## வெண்பா

நாயன் உதவியினால் நலவணுகா சித்தடியேன்
தூய செயல் குணமும் துர்க்குணமும்—வாயினால்
அகமகிழ்ந்து செப்புதற்கு அன்பாக நாட்டம் வைத்தேன்
ககனேழ் அமைத்தோனே காப்பு

---

ஆலம் அடங்கலும் ஆறுநாளில்
அமைத்த பெரியோன் தன் உதவிகொண்டும்
சீலம் அழகான நபியுடைய
சிறப்பாம் ஸலவாத்து தன்னைக் கொண்டும்

தாலம் தனிலுள்ள நல்லார்கள் தன்
சங்கை பறகத்தாலும் எளியேன்
கோலம் அழகிய குணம் துர்க்குணம்
கூறி உரைக்கிறேன் கூர்ந்து கேளீர்

ஏற்றமுள இமாம் கஸ்ஸாலியார்
இஹ்யா உலூமித்தீன் கிதாபு தனில்
போற்றலுள்ள நற் செயல் குணமும்
பொல்லாச் சீலமும் பேசி வந்தார்

ஆகா துர்க்குணம் பத்துண்டு கேள்
அன்னத் தளப்பும் பேச்சின் அளப்பும்
ஏகன் பொருத்த மில்லாக் கோபமும்
இழிவாம் ஹஸதுவும் புகுலும் இன்னும்

ஹஸது - வஞ்சகம் புகுலு - கஞ்சத்தனம்

ஜாஹெனும் தலைமை உகப்பும்
தம்மை துன்யாமேல் ஆசைவைப்பும்
வாகல்லா கிப்ரும் மதிப்பும்
வன்மை யணுகாத ரியாவுமாமே

வன்மை யுள சீலம் பத்துண்டு கேள்
வரிசை தவ்பாவும் அச்சப் பாடும்
தம்மை துன்யாவை நெகிழுதலும்
சங்கையுள ஸப்ரும் ஷுக்றும்

உண்மை இக்லாஸும் பரஞ்சாட்டலும்
உடையோன் முஹப்பத்தும் பொருந்துதலும்
செம்மை யுடன் சாவை நினைப்பதுவும்
சிறப்பான நல்ல ஸிபாத் தாகுமே

அசட்டுக் குணம்பத்தும் தொடராகவே
ஆதி அருட்படி உரைக்கு கிறேன்
கசட்டுக் குணமின்றி காதலாக
காசினி யுள்ளோர் கேட்டிருங்கோ

வருசை மிகச்சேர்ந்த இமாம் கஸ்ஸாலி
வடுவாம் குணத்துக்கெல் லாம் முதவே
பரிசு பெறப்பேசி னார் அன்னதின்
பார அளப்பான குணம் தனையே

எல்லா அமலிலும் ஏற்றமான
இனிய அமல்பசித் திருப்பதென
அல்லாஹ் தனைத்தலைக் கண்ணுற்கண்ட
அரசான நபி இரஸூல் சொன்னார்

---

கிப்று - தற்பெருமை
ரியா - புறம் பேசுதல்
ஷுக்று - நன்றி
முஹப்பத் - உகப்பு

தவ்பா - பாவமன்னிப்பு
ஸப்ரு - பொறுமை
இக்லாஸ் - கலப்பறுதல்



மகளே பாத்திமா உன் தகப்பன்
வாயில் இதுமூன்று நாளைக்குப்பின்
சுகமாய் விழுந்தது எனவுரைத்தார்
சூரியன் தனை வரவழைத்தோர்

வரிசை யுள ஷெய்கு அபூபக்கர் தாம்
வாகாய்ப் பசித்திருப் பார் ஆறுநாள்
குருவான ஜுபைர் மகன் அப்துல்லாஹ்
குணமாய்ப் பசித்திருப் பார் ஏழுநாள்

ஊறுல் கொழுப்பான உலமாக்கள் மேல்
உடையோன் முனிவாக இருப்பானென
நாணமுள மூஸா நபிவேதத்தில்
நல்லபடி வந்து இருக்குதென

கோணந்தனில் திசை யான எங்கள்
கோஜா இப்னுமஸ் ஊதென்பவர்
பேணி உரைத்தாரென் றூர் கஸ்ஸாலி
பெரிய இஹ்யாவென் னும்கிதாபில்

பயிர்நீர் மிகுந்ததால் அழியுகின்ற
பரிசுபோ லுங்கள் கல்பு சாகும்
உயிரை அடைக்கின்ற முட்டின்றியே
ஊண் தீன் மிகுந்தாலென் றுரிரஸூல்

உந்தன் உடலுக்கு ஜகாத் தாவது
உறுதி யுடன்பசித் திருப் பதென்ன
சந்திரன் தனை இருபிளவாய்
தரணி தனில்அழைப் பித்தோர் சொன்னார்

---

கல்பு - இருதயம்

காணுக் குறையத்தின் போரைக் கொண்டு
ககனேழ் அமைத்தவன் வீருகவே
காணுப் பெரியோன் சொல் வானெனவே
கஃபா ஸுஜூது செய் தோருரைத்தார்

இருக்கால் தின்பது ஒருநாளையில்
இஸ்ரா பெனும் கடப் பாகுமென
அருக்கன் தனைமீள அழைத்தநபி
ஆயிஷா வுடன் அருளிச் செய்தார்.

---

## வெண்பா

சோற்றின் அளப்பதுவைச் சொல்லியபின் சிற்றடியேன்
வார்த்தை உரையின் வடுவளப்பை – ஏற்றமுள
வன்மை முஸ்லிமானோர் வாகுடனே கேட்டிருங்கோ
தம்மை வந்து சூழாமற் தான்.

---

வீணும் உரைகளைத் தவிர்த்திருக்கும்
மேலான பேர்க்கீ டேற்றமென
காணு தனில் அற்பம் தன்னைக்கொண்டு
களரி தனக்களித் தோருரைத்தார்

தம்மை விளைகின்ற நாக் கபத்தை
சங்கை யுடன்பேணிக் காப்போருக்கு
வன்மை பதிக்கு யான் பிணை எனவே
மானோ டுரையான நபியோதினர்

ஆதிதனக்கும் ஆகிரம் தனக்கும்
அகத்தால் யகீன் கொண்டோர் நல்லுரைகள்
நீதமுடன் செப்ப வும் அல்லது
நெறியாய் அமரவும் எனவுரைத்தார்

அருக்கன் - சூரியன் காணு - உணவு யகீன் - நம்பிக்கை



உள்ளிற் போரான இருஉறுப்பால்
உலகர் நரகத்தில் வீழ்வாரென
வெள்ளி மலை பொன்னின் பருவதத்தை
வேண்டாமென உரைத் தோருரைத்தார்

நாவின் உறுப்பினுல் நாசிகீழாய்
நாஸாம் மனுவினோர் நரகில் வீழ்ந்து
நோவு படுவார்கள் எனவே முன்னுள்
நூறுய் தஸ்பீஹ் செய் தோருரைத்தார்

ஆதம் மகன் தோஷ பாவமெல்லாம்
அவனின் நாக்கிலே இருக்குதென
நீதமுள திஃறும் அதற்கு
நிகராம் உரைகளும் அல்லவென்றுர்

இதற்காய் ஸித்தீகு அபூபக்கர் தாம்
இனிய மணிவாயில் கல்லொதுக்கி
கதிக்க இருப்பாரென் றுர்கிதாபில்
கனதி யுள இமாம் கஸ்ஸாலியார்

நாவா லுளதீங்கு மிகுதியுண்டு
நாவில் அடர்ந்தேறும் தீங்கஞ்சுவேள்
தாவும் புறம் போற்றல் பொய் முனேதம்
தர்க்கம் இடுவதும் அஞ்சுமென்றுர்

சங்கை யுளமுஃமீன் ஜினு களவு
தன்மை யாய்ச்செய்வா னேவெனவே
எங்கும் நபியானோர் தமைக் கேட்டபின்
ஏறுச்செயல் இவை செய்வா னென்றுர்

---

நூறுய் - ஒளிமயமான நிலையில் தஸ்பீஹ் - இறைவனைத் துதித்தல்
திக்று - இறை தியானம், இறை பெயர் உச்சாரணம்

ஆகா உரையான பொய் மொழிகள்
அருள்வானோ மூமின் என்றளவில்
ஏகன் விலக்கின பொய் உரைகள்
இயம்பானென சொன்னாரிந் தழைத்தோர்

பொய்யும் சதி இவைரண்டு மின்றி
போற்றலுள மூமின் அங்கந்தனில்
அய்ய குணமெல்லாம் உண்டெனவே
ஆட்டை ஹயாத்தாக்கி னோருரைத்தார்

தங்கட மின்றி பொய் சொல்லுதல்
தண்மை அணுகிய ஹறா மெனவே
தங்கம் போல் உரையாக இமாம்
சங்கை இஹ்யாவில் சாற்றினரே!

வேதம் தனில் விலக்கான, "புறம்"
வீணாம் ஜனாவிலும் கடின மென
ஆதம் தனில் ஒளியாக நின்ற
அண்ணல் நபியுல்லாஹ் அருளிச் செய்தார்

சொறியும் நகத்தினால் சில மனிதர்
சொறிந்து இழுக்கிறார் முகச்சதையை
அறிவித்திடு மென்றேன் ஜிப்ரீலுடன்
அருளினார் புறம்பேசி என்றே

பொருத்தக் கேடான சொல்லுரைகள்
புகலுவது கீபத்தாம் ஏது போல்
கரத்தில் கிடக்கின்ற குப்பாசகை
கடிந்த நீள மென்றுரைப்பதுமே

ஹயாத்தாக்கி - உயிராக்கி
ஜிப்ரில் - வானவர்
ஜனா - விபச்சாரம்
கீபத் - புறம் பேசுதல்



மார்க்கக் காரியம் தனக்காகவும்
வாகாய் அறியவும் போல் கொத்த
பார்க்கும் காரியம் தனக்காய் புறம்
பகர துருஸ்த் தென்றார் கஸ்ஸாலியார்

தர்க்கமொழி பேசா தமைந் தோர்கட்கு
தங்க பதிதனில் ஓர் மாளிகை
ஹக்கன் கொடுப்பா னென்றுரைத்தா ரெங்கள்
கண்ணின் மணியான ஹபீபிரஸூல்

ஹக்காய் இருக்கின்ற தர்க்கம் தனை
களைந்தோர் நின்னய உர்ப்பணத்தை
ஒக்க நிரப்பமாய் பெற்றாரென
உடும்போடு ரையான நபியோதினார்

உந்தன் உடப்பிறப் பானோருடன்
ஊனமுள தர்க்க முனோதங்கள் தாம்
வந்தபொழுது சொலாய் எனவே
வானேறி மீண்ட மன்னர் சொன்னார்

ஹக்காம் முனோதங்கள் சில நேரத்தில்
கவல்வது ஜாயிஸாம் இரஸூல்
சக்கின்றி முனோதம் பகர்ந்தார்
சங்கையுள மாமி ஸபிய்யா உடன்

ஒருவன் தனை ஒருவன் போற்றலாய்
உரைத்த பொழுதுரைத்தா ரிரஸூல்
கருவிதனைக் கொண்டு உன் தோழனின்
கழுத்தை அறுத்துப் போட்டா யெனவே

துருஸ்த் - நலம்
ஹக்கன் - இறைவன்

தண்மையுள பாஸிக் காஞேர்களை
சங்கைப் புகழாகப் போற்றும் போது
உண்மை உடையோன் தன்முனிவு மிக
உண்டாமெனச் சொன்ஞர் உண்மை நபி

## வெண்பா

லாபமிலாப் பேச்சுரையின் நட்டமதைப் பேசியபின்
கோபத்தாலுள்ள குறிகேட்டின் அபத்தைப்
பேசுகிறேன் சிற்றடியேன் பேணுதலாய் நல்லோர்கள்
வாசமாய்க் கேளிர் மகிழ்ந்து.

கோபம் தனைக் கொண்டு ஈமானெறி
குலேயும் கசப்பான கத்தாளையால்
லாபம் மிகுந்திடும் தேன்மதுரம்
நாறிக் குலேயும் போலென நவின்ருர்

ஆகாத கோபம் வந்தளவில்
அங்கம் தனை மீறுதடக்கு வோர்கள்
வாகு பெறபிலத் தோர்; மல்லிஞல்
மண்ணில் விழத்தட்ட அல்ல வென்ருர்

உந்தன் கோபத்தை யகற்றிக் கொண்டால்
வுடையோன் கோபமும் உன்னளவில்
தொந்திப் பாகா தென்றுரைத்தார் எங்கள்
சோதி ஹழ்ரத்தில் துலங்கி வந்தோர்

லாபமுள நபிபால் ஒருவர்
நல்ல அமல் செப்பும் என்றளவில்
கோபம் தனை மறுப்பாய் — எனவே
கூறிஞரவர் கேட்குந் தோறும்

பாஸிக் - கெட்டவன்
சோதி ஹழ்ரத்தில் - இறைவன் சமுகத்தில் (மி.'ராஜ்)



வேட்டை நாய் போலாம் கோபமென
மேலான இமாம் கஸ்ஸாலியார்
நாட்ட மிகவுள்ள இஹ்யாவினில்
நல்ல மிதாலாக வுரைக்க லுற்ருர்

பீஸபீலுக்கும் பெண் கார்க்கவும்
பிழையான தோஷம் தவிர்த்திடவும்
வாசமாய்க் கோபம் ஆமெனவே
வரிசை யிஹ்யாவில் இமாமுரைத்தார்

## வெண்பா

பொல்லாத கோபம் புகன்ற தன்பின் புல்லடியேன்
கல்லே மிகுத்த ஹஸதுதனை சொல்லுகிறேன்
காதலாய் கேட்டிருங்கோ காசினியில் உள்ளோர்கள்
ஓதி உரைப்பேன் வுகந்து.........

கேடாங் குணமான ஹஸதாவது
கிருபையுள அமல் அடங்கலையும்
நாடி அழித்திடும் தீவிறகை
நகட்டும் பரிசுபோல் என நவின்ருர்

உங்கள் தனக்கு முன் உண்டாகிய
உம்மத்தார் நசல் வுங்கள் பக்கல்
தங்காமல் வந்து ஊருதென
சங்கை நபியுல்லாஹ் சாற்றினராம்

பகைத்து ஹஸதாக யிருப்பவர்க்கு
படைத்தோன் பிழைபொருஞ்-அவன் நன்மைகள்
ககனில் புகுதாது அவனளவில்
கவிழ்த்தப் படுமென்றும் நபிமொழிந்தார்

மிதாலாக - எடுத்துக்காட்டாக
ஹஸது - நயவஞ்சகம்
பீஸபீல் - புனிதப்போர்

குறிகேடனாகிய ஹஸதாவது
கொடிய ஹறாமாகும் நன்மைதனில்
திறமாய் இசலிப்பாய் செய்கிறது
திண்ணமுள்ள ஹலால் தானாகுமே

மூன்று நாளைக்கு மேல்வெறுப்பாய்
முனிவாய் யிருப்பது ஹறாமாமென்றும்
தாண்டும் படியிருந்தால் நரகம்
தகுமா யெனவும் சென்றாரிரஸூல்

---

## வேறு

கெடும்பு வைக்கும் குறிகெட்ட மாந்தரே
அதம்பில்லாத யிறையோன் குர்ஆன் தனில்
இடும்பு வைப்பீர்களோ வென்றுறைக்கலாய்
உடும்பினோடு ரைத்த வர்க்கு வுரைத்தனன்

அவனிவாழும் முஸ்லிம் அனைவரும்
தவனமாய் உடப்பிறப் பாகவே
எவரும்ஒத்து இருங்கோ ளெனகுர்ஆன்
மவுனமாய் நபிபக்கல் வந்ததே

---

## வேறு

ஹஸதெனும் குணத்தினாலே காசினி யுள்ளோர்கள் தா
பிசகறக் கெட்டுப் போனார், பெரியவன் முனிவுமுண்டா
திசையின் முஃமினானோர், சேர்ந்துறவாடி வாழ்ந்தால்
அசைவிலா ஆதிபட்சம் அனைவரும் பெறுகலாமே



## கலிப்பா

எல்லாரும் ஒன்றா யினமொத்து வாழ்ந்திருந்தால்
பொல்லாப் பகைவர் பலமழிந்து போயிடுமே
அல்லாஹ் உதவி அழகான தீனோர்க்கு
எல்லாப் பொழுதும் இனிதா யிறங்கிடுமே

வன்மை முஸ்லிமானோர் வாகுடனே ஒன்றுபட்டு
செம்மை யுடன் நடந்து சிறப்பாம் உலமாக்கள்
உண்மை யுரைகேட்டு உகப்பாக வாழ்ந்திருந்தால்
தண்மை யனுகான்கிறுபை தரணிதனில் உண்டாமே

---

## வெண்பா

பகையாம் ஹஸதுதனைப் பகர்ந்துயான் செப்பியபின்
புகுலான துர்க்குணத்தை மோசமறத் தொகையாக
நாவால் உரைக்குகிறேன் நல்ல முஸ்லிமானோர்
ஆவலாய் அமர்ந்து கேளீர்

ஆகா புகுல்குணம் தன்னைக்கொண்டு
அழிந்து ஹலாக்கானார் முன்னிருந்தோர்
ளாகா இதையஞ்சி யிருங்கோளென
மஞ்சுகவிகையாய் வந்தோர் சொன்னார்

பிசினித் தனமும் தன்னை மதிப்பும்
பிரியும் ஹவா நப்ஸூம் மூன்றிவை
பிசகென்று கல்கை கெடுக்குமென
பின்முன்போல் தெரிவோரு ரைத்தார்

---

புகுலான-உலோபத்தனமான   கல்கை-படைப்பினங்களை (மனிதர்களை)

பிசினித்தனமும் கோழைத்தனமும்
பொல்லாங் குளசற்றுக் குணமெனவே
ஹஸனின் தகப்பரைக் கழுத்திலேற்றி
கஃபா புத்துகாஃனை கஃளந்தோர் சொன்ஞர்

ஈயா திருக்கின்ற பகீலி ஹயாத்
திம்மை தனில் பெற்று இருப்பதஃனை
துய்யோன் பொருத்த மற்றிருப்பானென
சொன்ன மணிந்தோஃனை வெறுத்தோர் சொன்ஞர்

ஸக்காத்தளியாத முதல் திரண்டு
தீரும் கியாமத்து நாளதனில்
ஹக்காய் கருநாக மாகவந்து
கடவாய் தஃனகக்டித் திழுக்குமென்ருர்

ஒட்டை இனத்தில் மா டாடினத்தில்
உகப்பா யவன் ஸக்காத் தளித்திலஃலயேல்
முட்டும் மறுப்பினுல் மிதிக்கும் காலால்
முடிவு நாஃளயில்யென வுரைத்தார்

வருசை நபியுல்லாஹ்ற தம்மைப்போலே
மண்டலந் தனில் ஈவோரில்ஃல
பிருசமுள்ள யார்கள் ஃபிஸபீலில்
பேணி யளித்தது மட்டில்ஃலயே!

தல்ஹா ரழியல்லாஹ்ற என்போர்கள்தான்
ஸப்அமி அதல்புதிர்ஹம் வெள்ளி
அல்லில் விழித்தளித்தார் இறைக்காய்
அழகாம் மதினத்தில் எளியோருக்கே





நூரு யிரத்து எண்பதாயிரம்
நூருன வெள்ளிதஃன இறைக்காய்
வீருன ஷெய்கு இப்னுஸுபைர்
பீவி ஆயிஷாபால் விடுத்தார்

இருநூர்ருயிரம் திர்ஹம் வெள்ளி
ஏற்றமுள இப்னுல்ஆஸ் என்போர்
கருதிஸுவால் செய்ய வந்தோனுக்கு
கடுக கொடுத்தவ ரனுப்பிவித்தார்

ஓர்மாடு கேட்ட இரப்பனுக்கு
உகப்பாய் யெழுனூறு மாடளித்தார்
சீரான ஷெய்கு இப்னுமிறு
சிறப்பான இறைதனக் காகவே!

ஜெய்னுல் ஆபிதீன் சிறு அலியார்
சிறப்பா மிப்னு உஸாமாவின்மேல்
தய்னை பத்து சின்னம் அல்பு
சங்கையுள தீனர்கஃள யிறுத்தார்

தோப்பும் பயஃலயும் பயல் நட்புக்காய்
தூய ஜஃபரு தையார் மகன்
கூப்பாகக் கொண்டு அந்தக்காவை
கொடுந்தாரவனுக்கு உரிமை செய்தே!

பதினுயிரம் பொன்னின் காசுகஃள
படைத்தோன் தனக்காக இமாம்சாபியீ
பதியிலுள்ள மஸாகீன் களுக்கு
பரிவா யளித்தாடை யுதறிவிட்டார்

ஷெய்கு அபூஹாதீ யென்பவரை
சிறப்பா யொருயிரப் பான்கேட்டபின்
வாகாய் என்னையே கொள்வாய் என்றார்
வஞ்ச மறவிற்று வழிநடந்தார்

கொண்ட பிறகவ னறிந்து ஷெய்கே
கோஜாவே போவென்ற னுப்பிவைத்தான்
வெண்டியுடன் ஏகிப்போ கையிலே
வே(று) ஒருவன் வந்தவரைக் கேட்டான்

கேட்டவுடன் ஷெய்கு முன்போலவே
கீழ்மைப் படுத்தி யென்னை யிழுத்து
கூட்டிப் போய்விற்றுக்கொள்வா யென்றார்
குணமா யவன் விற்றான் கொண்டவனும்

நாட்டமுடன் அறிந்தோர் பால்கெஞ்சி
நாட்டா மகனுன ஹுர்ரெனவே
வேட்டலுடன் சொன்னான் ஷெய்குமப்போ
மிகுதி பிருசமாய் வனம் புகுந்தார்

இய்யும் ஸகாவத்து குணமின்றியே
ஏகன் ஒரு ஒலிமார்களையும்
வையந்தனில் படைத்திலே எனவே!
வருசையுள்ள செய்கு ஸஹலுரைத்தார்

உந்தன் உடமையை நல்லவர்க்கு
உகப்பாகக் கொடுத் தாலுனக்கு
வந்த அமலிக்கெல்லாம் அறனாய்
வலுத்த பெருங்காவ லாகநிற்கும்

---

ஸகாவத்து - தர்மம் ஒலிமார் - இறைநேசர்கள்



வங்கிசம் தனில் கொடுக்குமது
வருசை நபகாவும் ஸதக்காவுமாம்
தங்கடப்படத் தன் குடும்பம்
ஸதகாப் புறம யிடல் ஹராமாகுமே

பெருத்த குடையாளி இவனெனவே
பேசப் படுவதற் களிப்போன் தனை
வருத்தம் மிகுந்திடும் எரியில் முந்த
வலிக்கப் படுமென்றார் மதியமைத்தோர்

எந்த னும்மத்தில் சற்றுயினோர்
ஈயாத புகலாக்களென்ன
கந்தரம் குடையான எங்கள்
கண்ணின் மணியான நபியோதினார்

போதுமெனு மட்டு தனக்கப்புறம்
பொல்லா துன்யாவை எடுத்தவர்கள்
ஏதுமறியாமல் தனக்கு வினை
எடுத்தோரெனச் சொன்னு ரெம்மிரஸூல்

திர்ஹம் தனைக்கையா ளும்பயலும்
தீனார் தனைக்கையா ளும்பயலும்
பிறகு ஹலாக்கானுரென வுரைத்தார்
பிணைக்கு பிணையான பெருமா நபி

### கலிப்பா

கும் பொழுதுனக் கிம்மையின் வாழ்வு இனித்திடுமோ
குமுன் உந்தன் முதலுக்கு ஸக்காத்து தரணிதனில்
ாகுடன் உகந்துகொடுத்தால் மறுமையின் வாழ்வுனக்கு
கன் னருட்படி மட்டின்றி வந்து தகைத்திடுமே

---

நபகா - படியுடை புகலாக்களென - உலோபிகளென
ஸதகா - கொடை ஹலாக்கானுர் - மரணித்தார்

## வெண்பா

புகுலின் கருமமும் மொழிந்தன் பின் சிற்றடியேன்
தகுதியெனும் ஜாஹுடையா தண்மைதனை
அற்பம் உறைக்குகிறேன் அவனிதனில் நல்லோர்க
கூர்ப்பமாய் கேளீர் குளிர்ந்து

ஆகிறு வாழ்வு அடங்கலுமே
அவனி வுயர்த்தி நாடார்க் கெனவே
சாகா னிறக்கினுன் குர்—ஆனதில்
தரணி உயர்த்தியை நாட வேண்டாம்

தலைமை வுகப்பும் மாலின் வுகப்பும்
தண்மை நிபாக்கை வுண்டாக்கு மென் றும்
உலக மடங்கலும் அவர்க்சாகவே
உண்டான ஒசை நபியோதினுர்

ஒநாயிரண்டு ஆட் டின்கிடையில்
உழப்பிக் கெடுப்பதில் மால்ஜாஹாசை
தீனைக் கெடுக்குமென் றினியநபி
தேனை வடுவாக்கும் சொல்லுரைத்தார்

அழியுந் தலைமையை விட்டு நீங்கி
அழியாத் தலைமையை நாடிக் கொள்வாய்
பழிசேர் துன்யாவில் தலைமையினுல்
பழீஹத்துமிக உண்டாகுமே!

ஸுல்தான் இப்ருஹீம் ராஜவாழ்க்கை
துன்பம் தனைவிட்ட சேதிதனை
ஸுல்தான் அலி பாத்துஷா கதையை
சொல்ல உலமாக்கள் கேட்டில்லையோ!

---

பழீஹத்து - கேவலம் புகுலின் - உலோபத்தனத்தின்
நிபாக்கை - நயவஞ்சகத்தனத்தை



நான் நாயன் என்ற "பிர்அவ்ன்" எங்கே!
நம் ரூதவனெங்கே! காரூனெங்கே!
ஈறுயமுள்ள ஹாமானெங்கே!
இவர்கள் பழீஹத்தைக் கேட்டிலையோ!

ஹறுமுக் கிலக்காகுந் தலைமைதனை
கல்பால் கருதாதே! கருபென் று காண்
துருபுள் ஒடுங்குவோ மென்றறிந்து
தோஷ துரமெல்லாம் விட்டகல்வாய்!

அம்பல ஆசை தனைவீடுவாய்
ஆயந் தனக்கு குத்தகைக்கு நில்லாய்
துன்பு துரமெல்லாம் விட்டகன் று
தீனை விருப்பமாய்த் தேடிக் கொள்வாய்

மனிதர் தனக்குநீ வழக்குத் தீராய்
மேன்மை யுலமாக்கள் பால் சாட்டுவாய்
சனத்தில் மதர்வாகத் திரியவேண்டாம்
தரைக்குள் கிடப்பதை நினைத்துக் கொள்வாய்

## வெண்பா

சற்று மிகுந் தலைமை கருமம்தனை
பிற்ருக செப்பி விளம்பியபின் — பற்றுன
நாயன் அருளால் நவில்வேன் துன்யாவுகப்பை
தூயபடி கேளீர் துணிந்து

## தொங்கல்

வான மழை கொண்டு வாடும்பயிர்
வளர்ந்து பசிந்துபின் கருகித்தூளாய்
ஈளமாய்ப் பறக்கும் போலென் று
இழிவாந் துன்யாவுக் கிறைஉவமை

---

பழீஹத்தை - கேவலத்தை கருபென் று - கெடுதியென் று
துருபுள் - மண்ணுக்குள்

தானமாய் சொன்னுன் குர்ஆனதில்
சங்கை நபி சொன்னு ரிவ்வுகப்பு
ஊனமுள்ள பாவம் அடங்கலுக்கும்
உரத்த தலேயென்று அறிந்தழகாய்

ஈஸா நபி சொன்னுர் யார்களுடன்
ஈன துன்யாமேல் உகப்புதீனை
வாசம் கெடுத்தழிக்கும் எனவே
மறுமை தனைத்தேடி இதை இகழ்வாய்

உடமையால் இந்த பதிசிறப்பு
உண்டாம் மறுமையில் சிறப்பாவது
உடையோன் வணக்கத்தால் என்றும் நல்ல
உமறு ரழியல்லாஹ் அன்ஹு சொன்னுர்

இந்தப் பதி வாழ்க்கைதனை இகழ்ந்து
இலங்கும் மறுமையின் வாழ்வுதனை
நந்தும் படிதேடி பகல் இரவாய்
நாயன் தனையஞ்சி அமல்புரிவாய்

## வெண்பா

துன்யா உகப்பைச் சொல்லியபின் தோஷப்பயல்
அனியாய மானகிப்ர் அம்ருதனை — இனிதாகச்
சொல்லமன துவைத்தேன் துய்யமுஸ்லீம்களெல்ல
நல்லபடி கேளீர் நயந்து

## தொங்கல்

பெருமைக் குணம் வுள கல்புதனில்
பெரியோன் முத்திரை போடுவானென்
றருமை குர்ஆனில் பகரலுற்ருன்
ஆகா பெருமையை விடுவீர்களே!





கெட்ட பெருமைக் காரருக்கு வீடு
கீழா யெரிகின்ற நரகமென்றும்
தட்டாய் யெழுவானம் அமைத்த ஆதி
சங்கையுள வேதமதனிற் சொன்னுன்

கடுகு மணி நிறை கிப்ருடையான்
கனகப்பதி சொர்க்கம் புகுதானென்ன
முடுகும் மனிதரை ஆதரிக்கும்
முர்ஸல் "நபிநயினுர்" மொழிந்தார்

## வெண்பா

பெருமை யெனும் கிப்றை பேசியபின் பேசுகிறேன்
ஒருவன் முனிவான உஜ்பின் குணத்தை—கருதியான்
செப்ப மனது வைத்தேன் தீனேர்களெல்லாரும்
நட்பாகக் கேளீர் நயந்து

## தொங்கல்

தீங்குதனைச் செய்து நன்மையென்று
தில்லால் நினைத்தோர்கள் செத்தாரென்று
ஓங்கு "குர்ஆனில்" நபிதமக்கு
உலகம் அமைத்தாதி உரைத்தனனே

கடிந்த புகழும் தன்னை மதிப்பும்
ஹவாவும் இம்மூன்றும் கெடுக்குமென்று
படிந்த குணமான முந்தஸலாம்
பகரும "நபியுல்லாஹ்" பனுவல் செய்தார்

தன்னை மதிப்பது எழுபதாண்டில்
சங்கையுள நன்மைதனைப் போக்குமென்
றன்னை பிதா தன்னை ஹயாத்தாக்கின
அரசர் நபியுல்லாஹ் அருளிச் செய்தார்

கிப்ரு - பெருமை   தில்லால் - உள்ளத்தால்   ஹவா - பேராசை

## வெண்பா

ஊனமிகுந்த "உஜ்பு"க் குணத்திலுள்ள
ஈனம் தனைச் செப்பி இயம்புவேன் — தீனை
கெடுக்கும் ரியாக் குணத்தைக்கீர்த்தி முஸ்லீம்களெல்லாம்
அடுக்கவந்து கேளீர் அமர்ந்து

## தொங்கல்

முகத்துக் காய்த் தொழும் மனிதருக்கு
முனிவான ஒயில் ஓடை யென்று
அகத்துக்குள் நினை வறியுகின்ற
ஆதி "குர்ஆனில்" அருளிச் செய்தான்!

## கலித்துறை

மனிதரை நாடி அமல்செய்யும் ஓதின வம்பருக்கு
சனியான 'ஜுப்புல் ஹுஸ்னெனும்' ஓடையைத் தங்கரித்து
முனிவாய் யிருக்கு தென உரைத்தார் முர்சலுக்கரசர்
பனியாதம் மக்களை மண்ணென்றுகண்டு வணங்குவயே!

## தொங்கல்

ஈனமுளரியா யெம்மாத்திரம்
இருக்கும் அமல்தனை இறையோன் கபூல்
தானமாய்ச் செய்யான் என்று நபி
சாற்றினர் ரியாக் குணம் விடுவாய்

ஏற்றமுள இமாம் கஸ்ஸாலியார்
இஹயா வுலுமித்தீன் எனும் கிதாபில்
போற்றலுள "அக்லாகுவையும்"
பொல்லாக் குணத்தையும் பேசிவந்தார்.

— நிறையும் —

---

உஜ்பு - கர்வம்  ரியா - முகஸ்துதி  அக்லாகு - நற்குணங்கள்